உ
சிவாய நம:



ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாதர்கள் அருளிய

# ॥ श्री मीनाक्षी पञ्चरत्नम् ॥

## ॥ ஸ்ரீ மீனாக்ஷீ பஞ்சரத்னம் ॥

தமிழ் உரை:
ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக
பிரம்மஸ்ரீ **P.N. நாராயண சாஸ்திரிகள்**

**उद्यत्भानुसहस्रकोटिसदृशां केयूरहारोज्ज्वलां**
**बिम्बोष्ठीं स्मितदन्तपङ्क्तिरुचिरां पीताम्बरालङ्कृताम् ।**
**विष्णुब्रह्मसुरेन्द्रसेवितपदां तत्वस्वरूपां शिवां**
**मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ १**

**உத்³யத்பா⁴னுஸஹஸ்ரகோடிஸத்³ருஶாம் கேயூரஹாரோஜ்ஜ்வலாம்**
**பி³ம்போ³ஷ்டீ²ம் ஸ்மிதத³ந்தபங்க்திருசிராம் பீதாம்ப³ராலங்க்ருதாம் ।**
**விஷ்ணுப்³ரஹ்மஸுரேந்த்³ரஸேவிதபதா³ம் தத்வஸ்வரூபாம் ஶிவாம்**
**மீனாக்ஷீம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸந்ததமஹம் காருண்யவாராம்நிதி⁴ம் ॥ 1 ॥**

1. "உதயமாகிற கோடிக்கணக்கான ஸூர்யர்களுக் கொப்பானவளும் தங்கத்தினலான தோள்வளைகள் மாலைகளோடு விளங்குபவளும் கொவ்வைப்பழம் போன்ற உதட்டை உடையவளும் புன்சிரிப்பால் அழகான பல்வரிசைகளை உடையவளும் பட்டு ஆடையால் அணி செய்யப்பட்டவளும் திருமால், நான்முகன், தேவராஜன் முதலியோரால் தொழப்பட்ட திருவடிகளையுடையவளும், உருவமற்ற எங்கும் நிறைந்த பரம்பொருளேயானவளும், மங்களமே உருவானவளும் கருணைக்கடலுமான மீனாக்ஷியை எப்பொழுதும் நான் வணங்குகிறேன்".

मुक्ताहारलसत्किरीटरुचिरां पूर्णेन्दुवक्त्रप्रभां
शिञ्जन्नूपुरकिङ्किणीमणिधरां पद्मप्रभाभासुराम् ।
सर्वाभीष्टफलप्रदां गिरिसुतां वाणीरमासेवितां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ २

முக்தாஹாரலஸத்கிரீடருசிராம் பூர்ணேந்து³வக்த்ரப்ரபா⁴ம்
ஶிஞ்ஜந்நூபுரகிங்கிணீமணித⁴ராம் பத்³மப்ரபா⁴பா⁴ஸுராம் ।
ஸர்வாபீ⁴ஷ்டப²லப்ரதா³ம் கி³ரிஸுதாம் வாணீரமாஸேவிதாம்
மீனாக்ஷீம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸந்ததமஹம் காருண்யவாராம்நிதி⁴ம் ॥ 2

2. "முத்து மாலைகளினால் அலங்கரிக்கப்பட்ட கிரீடத்தினால் மிக அழகாய் விளங்குபவளும், நிறைமதிக்கு ஒப்பான அழகிய முகத்தை உடையவளும் நவரத்ன மணிகளால் ஒலிக்கிற கால் கொலுஸுகளை அணிந்தவளும் தாமரை மலருக் கொப் பானவளும், எல்லோருக்கும் வேண்டியதைக் கொடுப்பவளும், மலைமகளும், ஸரஸ்வதீ லக்ஷ்மியால் தொழப்பட்டவளும், கருணைக் கடலுமான மீனாக்ஷியை நான் எப்பொழுதும் வணங்குகிறேன்"

श्रीविद्यां शिववामभागनिलयां ह्रीङ्कारमन्त्रोज्ज्वलां
श्रीचक्राङ्कितबिन्दुमध्यवसतिं श्रीमत्सभानायकीम् ।
श्रीमत्षण्मुखविघ्नराजजननीं श्रीमज्जगन्मोहिनीं
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ ३

ஶ்ரீவித்³யாம் ஶிவவாமபா⁴க³நிலயாம் ஹ்ரீங்காரமந்த்ரோஜ்ஜ்வலாம்
ஶ்ரீசக்ராங்கிதபி³ந்து³மத்⁴யவஸதிம் ஶ்ரீமத்ஸபா⁴நாயகீம் ।
ஶ்ரீமத்ஷண்முக²விக்⁴னராஜஜனனீம் ஶ்ரீமஜ்ஜக³ன்மோஹினீம்
மீனாக்ஷீம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸந்ததமஹம் காருண்யவாராம்நிதி⁴ம் ॥ 3

3. "ஸ்ரீவித்யை என்கிற மந்திரத்தின் உருவானவளும் பரமேச்வரனின் இடப்பாக த்தை இருப்பிடமாய்க் கொண்டவளும் "ஹ்ரீம்" என்கிற மந்திரத்தினால் ஒளி வீசுபவளும் ஸ்ரீ சக்ரத்தின் நடுவில் விளங்குகிற பிந்து என்னும் உயர்ந்த ஸ்தான த்தை இருப்பிடமாய்க் கொண்டவளும், மதுரையம்பதியில் ஸபாநாயகியாய் விளங் குபவளும், யானை முகன், ஆறுமுகன், இருவருக்கும் தாயும், உலகையே மோஹிக் கச் செய்பவளுமான மீனாக்ஷியை நான் எப்பொழுதும் வணங்குகிறேன்".

குறிப்பு: - कामोयोनिः - विश्वमातादि विद्या காமோயோனி: - விஶ்வமாதாதி³ வித்³யா

பதினைந்து எழுத்துகள் கொண்ட மந்திரத்திற்கு ஆதிவித்யை ஸ்ரீவித்யை என்று பெயர். இது தேவீ உபநிஷத்வாக்யம் த்ரிபுராதாபிநீ என்னும் உபநிஷத்தும் இந்த மஹாமந்திரத்தை சிறப்பாய் மந்திர ராஜமென்றும் இதற்கு மேலானது ஒன்றும் இல்லை யென்றும் கூறுகிறது.

**येने वलभ्यते विद्या-श्रीमत्पञ्चदशाक्षरा**

**யேனே வலப்⁴யதே வித்³யா-ஸ்ரீமத்பஞ்சத³ஶாக்ஷரா**

பல பிறவிகளில் செய்து குவித்த புண்யக் கூட்டத்தினால் இந்த ஸ்ரீ வித்யையை குருவினிடமிருந்து அடையமுடியும் என சாஸ்திரங்கள் கூறுகின்றன.

**श्री सुन्दरी साधकपुङ्गवानां भोगश्चमोक्षश्च करस्थराव**

**ஸ்ரீ ஸுந்த³ரீ ஸாத⁴கபுங்க³வானாம் போ⁴க³ஶ்சமோக்ஷஶ்வ கரஸ்த²ராவ**

இந்த மந்திரத்தை உபாஸிப்பவனுக்கு இம்மை, மறுமை, இரண்டும் கையிலேயே உள்ளது உள்ளது என்றும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு நிகரற்று விளங்கும் ஸ்ரீ வித்யா என்னும் மந்திரராஜத்தின் உருவே மீனாக்ஷி என்று ஆதிசங்கரர் கூறுகிறார்.

**वियदाकारसंयुक्तं वीतिहोत्रसमन्वितम् ।**
**अर्धेन्दुलसितं देव्या बीजं सर्वार्थसाधकम् ॥ ११ ॥**

**வியதா³காரஸம்யுக்தம் வீதிஹோத்ரஸமன்விதம் ।**
**அர்தே⁴ந்து³லஸிதம் தே³வ்யா பீ³ஜம் ஸர்வார்த²ஸாத⁴கம் ॥ 11 ॥**

(தேவீ உபநிஷத்)

சிந்தாமணி, புவநேச்வரி, மாயா, என்று பலபெயர்களால் புவநேச்வரீ மந்திரமும் எல்லாவற்றையும் கொடுக்க வல்லது. ஸ்ரீ வித்யா மந்திரங்களுக்குள் இந்த "ஹ்ரீம்" எழுத்தே உயிர் நாடியானது. ஆகவே இந்த புவநேச்வரீ மந்திரத்திற்கு நிகரானது ஒன்றுமில்லை, அந்த புவனேச்வரியே மீனாக்ஷி யென்றும் கூறுகிறார்.

"பிந்துமத்யவஸதீம்" என்பதால் சக்ரராஜமான ஸ்ரீ சக்ரத்தைக் கூறுகிறார்.

**बिन्दु त्रिकोण - परदेवतायाः பி³ந்து³ த்ரிகோண - பரதே³வதாயா:**

என்கிற வசனப்படியும்

**पञ्चवारं चक्रं परिवर्तते पृथु பஞ்சவாரம் சக்ரம் பரிவர்ததே ப்ருது²**

என்கிற அருணோபநிஷத்வாக்யப் படியும், சிவமயமான நான்கு முக்கோணங்களும், சக்தி மயமான ஐந்து முக்கோணங்களும் ஆக 9 கோணங்கள் கொண்ட சிவசக்தி மயமானது ஸ்ரீ சக்ரம். இதில் பிந்து என்னும் இடம். இதிலேயே அம்பிகையே நிலை கொண்டுள்ளாள்.

**अष्ट का नवद्वारा, देवानां पूरयोध्या**

**அஷ்ட கா நவத்³வாரா, தே³வானாம் பூரயோத்⁴யா**

என்கிற வேத வாக்யங்களும் இதையே உறுதிப்படுத்துகின்றன. மிகுந்த புண்யவான்

களுக்கே இந்த ஸ்ரீசக்ர பூஜை செய்யும் பாக்யம் கிடைக்கும். வேதோக்தமான அம்பிகையின் ஸ்ரீ சக்ரவழிபாட்டைக் கூறுகிற ஆசார்யாள் மீனாக்ஷியே அந்த சக்ரத்தில் வஸிப்பவள் என்று தன்னை மறந்து பேசியிருக்கிறார்.

**श्रीमत्सुन्दरनायकीं भयहरं ज्ञानप्रदां निर्मलां**
**श्यामाभां कमलामनाचितपदां नारायणस्यानुजाम् ।**
**वीणावेणु मृदङ्गवाद्यरसिकां नानाविधाडम्बिकां**
**मीनाक्षीं प्रणतोऽस्मि संततमहं कारुण्यवारां निधिम् ॥ ४**

**ஸ்ரீமத்ஸுந்த³ரநாயகீம் ப⁴யஹரம் ஜ்ஞானப்ரதா³ம் நிர்மலாம்**
**ஶ்யாமாபா⁴ம் கமலாமனாசிதபதா³ம் நாராயணஸ்யானுஜாம் ।**
**வீணாவேணு ம்ருத³ங்க³வாத்³யரஸிகாம் நானாவிதா⁴ட³ம்பி³காம்**
**மீனாக்ஷீம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸந்ததமஹம் காருண்யவாராம் நிதி⁴ம் ॥ 4**

4. மதுரை நாயகனான ஸுந்தரேசனின் நாயகியானவள் பக்தர்களின் பயத்தைப் போக்கடிப்பவள். உயரிய ஞானத்தை அளிப்பவள். குற்றமற்றவள், ச்யாமளை உருவானவள். தாமரையை ஆஸநமாய்க் கொண்ட நான்முகனால் பூஜிக்கப்பட்ட திருவடிகளையுடையவள். நாராயணனின் உடன் பிறந்தவள். வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் இந்த வாத்யங்களை ரஸிப்பவள் ஒரு சக்ரவர்த்திக்குரிய மரியாதைகளைப் பெற்றவள். அப்படிப்பட்ட கருணைக்கடலான மீனாக்ஷியை நான் எப்பொழுதும் வணங்குகிறேன்.

**नानायोगिमुनीन्द्रहृन्निवसतीं नानार्थसिद्धिप्रदां**
**नानापुष्पविराजिताङ्घ्रियुगलां नारायणेनार्चिताम् ।**
**नादब्रह्ममयीं परात्परतरां नानार्थतत्त्वात्मिकां**
**मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ ५**

**நானாயோகி³முனீந்த்³ரஹ்ருந்நிவஸதீம் நானார்த²ஸித்³தி⁴ப்ரதா³ம்**
**நானாபுஷ்பவிராஜிதாங்க்⁴ரியுக³லாம் நாராயணேனார்சிதாம் ।**
**நாத³ப்³ரஹ்மமயீம் பராத்பரதராம் நானார்த²தத்த்வாத்மிகாம்**
**மீனாக்ஷீம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸந்ததமஹம் காருண்யவாராம்நிதி⁴ம் ॥ 5**

5. "யோகிகளான பல சிறந்த முனிவர்களின், இதயத்தை இருப்பிடமாய்க் கொண்டவள், பலவிதமான ஸித்திகளைக் கொடுப்பவள், பல மலர்களினால் அருச்சிக் கப்பட்ட திருவடிகளை உடையவள், நாராயணனால் அருச்சிக்கப்பட்டவள், ஸங்கீ தமே உருவானவள், எல்லாவற்றிற்கும் மேலானவள், பலவிதமான பொருள்களைக் கூறும் வேதாந்த சாஸ்திரங்களில் முடிவாய்க் கூறப்பட்ட பிரும்மமேயானவள் ஆகிய மீனாக்ஷியை கருணைக்கடலை நான் எப்பொழுதும் வணங்குகிறேன்".

குறிப்பு: - **द्वादशामो उपायका: த்³வாத³ஶாமோ உபாயகா:**

அம்பிகையின் ஆரம்ப உபாஸகர் 12 பேர்கள். அவர்களில் துர்வாஸர், அகஸ்தியர் லோபா முத்திரை ஆகியோர் அம்பிகை உபாஸனத்தில் முதன்மை பெற்றவர்கள்.

ஆதிசங்கரரும் ஆத்ரேயகோத்திரத்தில் பிறந்தவர் ஆகவே தன் முன்னோர்களான துர்வாஸர், தத்தாத்ரேயர், லோபாமுத்திரை ஆகியோர் வழிபட்டதை மனதில் கொண்டு, யோகிகளான முநிவர்களின் இருதயத்தில் நிலை கொண்டவள் என்று கூறுகிறார். மேலும், அகஸ்தியர், வஸிஷ்டர், விச்வாமித்ரர், கௌதமர் முதலிய பல யோகிளான முநிவர்களும் வேதமாதாவான காயத்ரியையும் ஸ்ரீவித்யையும் உபாஸித்து ஸித்தி பெற்றவர்கள், இதை வேதமும் கூறுகிறது.

**अदिबिर्देवागन्धर्वा - अमृतेतिवसिष्ठः**

**அதி3பி3ர்தே3வாக3ந்த4ர்வா - அம்ருதேதிவஸிஷ்ட2ஃ**

என்கிற தைத்தரீயோபநிஷத், வஸிஷ்டர் அம்பிகை வழிபாட்டில் சிறந்தவர் என்பதற்குப் பிரமாணம். இப்படி உயர்ந்த அம்பிகை வழிபாட்டை தன் இதயத்தில் கொண்டிருந்தபடியால் இந்த மீனாக்ஷி பஞ்சரத்நம் என்னும் துதியின் மூலம் சிறந்த கருத்தை வெளியிட்டிருக்கிறார். எனவே பக்தர்கள் அனைவரும் சிறந்த இத்துதியைப் படித்து ஸ்ரீ மீனாக்ஷியின் அருளை அடையவேண்டும்.

இதை வெளியிடும் பாக்கியம் செய்த மாம்பலம் ஸ்ரீ சங்கர பக்தஜனஸபா ஸ்தாபகரும் பணியாளருமான ஸ்ரீமான் ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்களுக்கும் அம்பிகையின் அருள்கிட்டுவதாக.

## इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य श्रीमच्छङ्करभगवतः कृतौ मीनाक्षी पञ्चरत्नम्

**இதி ஸ்ரீமத்பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யஸ்ய ஸ்ரீகோ3விந்த3ப4க3வத்பூஜ்யபாத3 ஶிஷ்யஸ்ய ஸ்ரீமச்ச2ங்கரப4க3வதஃ க்ருதௌ மீனாக்ஷீ பஞ்சரத்னம்**

**சுபம்.**